Reg. No. M. 2997.

தனிப்பிரதி 1 அணா

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

# VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமைதோறும் வெளிவருவது

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. குறள்.

VOL. I. { புதுவை, ஸ்ரீமுக ௵ மாசி ௴ ௧௧ ௳ (22—2—34) } No. 13

## திருமந்திரம்

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கா
ளகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்த
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

அப்பினி லுப்பென வத்த னணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தமை
யெப்படி யப்படி யென்னுமவ் வாறே.

கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந்
தின்றார்க் கறியலா மப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானாற்
கொண்டா னறிவன் குணம்பல தானே.

உ
திருவருள் துணை.




காலமுண்டாகவே காதல்
செய்துய்மின் கருதரிய
ஞாலமுண்டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்
பிரான்தன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்கு
கின்றானவந்து முந்துமினே.
(திருவாசகம்.)

# வித்தகம்

புதுவை,
ஸ்ரீமுக மாசி மீ 11உ

## இல்லறம்

இல் என்பது இடம், வீடு எனப்படும். சரீரமே இடமும் வாய்மையான வீடுமாகும். அதனிடத்து அடங்கினது பொருள். சரீரமாகிய இல்லின் அசைவே அறம். சத்தசைவு சித்தசைவு என்னும் இரண்டும் கூடிய அசைவு அறம். இவ் அசைவு அறாதிருப்பதே — அறாது இருப்பதற்கேற்ற ஒழுக்கமே இல்லறம்—இல்வாழ்க்கை. இவ் அசைவு அறுதற்கேற்ற—ஒழிதற்கேற்ற செயல்—ஒழுக்கம்—வாழ்க்கை இல்லறமாகாது. இவ் அசைவு அறுதலே சாதல். இவ் அசைவு ஒழிதற் கேற்ற ஒழுக்கம் பிறவி நெறி காட்டுதலால் நல்லறமாகாது மறமாகும். "இல்லறமல்லது நல்லற மன்று" என்றனர் ஒளவைப் பிராட்டியார். "அறனெனப்பட்டதே இல் வாழ்க்கை" என்பது தேவர் குறள். ஒருவனும் ஒருத்தியும் கூடி முயன்று உயிர் வாழ்வதே—அசுத்த பௌதிக காரியமாகிய ஐம்புல வின்பங்களும் அநுபவித்து வாழ்வதே இல்லறம் எனப்படுவது உலகியலாகிய போலி நிலை. இல்லறம் என்னும் வாய்மையான அரிய பெரிய ஒழுக்கத்துக்கு மாயாகாரிய முன்னிலைகளே—முன்னிலைகளாகிய கற்பனைகளே தலை சிறந்தன—இன்றியமையாதனவாகும். நாம் உறையும் வீடு பெண்டிர் மக்கள் சுற்றம் பொருள் ஏவல் என்னும் மாயா காரிய முன்னிலைகள் இவ்வொழுக்கத்துக்குத் துணைக் கருவிகளாகின்றன. இக்கற்பனைகளே இல் வாழ்க்கையை—சரீர வாழ்க்கையை இனிதின் இயலுமாறு செய்வன. கற்பனைகளாகிய மாயா காரியங்களானன்றி ஏனைய உபாயங்களால் அஃதாவது இவற்றை வெறுத்து ஒருபால் ஒதுங்குவதால் மாயையை உறவுபடுத்துதல்-வெல்லுதல் என்பது முடியாத காரியமே. உலகத்திலே ஒவ்வொரு சீவனும் ஐம்புலநுகர்ச்சியில் கட்டுப்பட்டுள்ளதென்பதும், அக்கட்டைத் தகர்த்து முன்னிலைகளைத் தனக்கு அடிமைப்படுத்தி இயற்கையோடு ஒத்து நின்று இன்புற அறியாது இடர்ப்படுகின்றதென்பதும் வெள்ளிடையாகும். ஒவ்வொரு சீவனுக்கும் தேக சம்பந்தம் என்னும் காமப்புணர்ச்சியே தலை சிறந்ததும் அத்தியாவசியகமுமாம். ஆயினும்இப்புணர்ச்சியாலாய உணர்ச்சியும் அசுத்தமாகிய ஐம்புலன்களுக்கு உட்பட்டதேயன்றி வேறன்று. இவ்வுணர்ச்சி பிறவிக்கு ஏதுவாகிய மாயா சம்பந்தமான அசுத்தகாம இன்பமேயன்றிப் பிணி மூப்புச் சாக்காடு என்பன இன்றி அநுபவிக்கப்படும் வீடு பேற்றின்பமாகிய—வீடு பேற்றினைத் தரும் இன்பமாகிய சுத்த காம உணர்ச்சியன்று. அசுத்தமாகிய ஐம்புலநுகர்ச்சிகள்—முன்னிலைகள் குருவருளால் சரீர பௌதிக நிறையறிந்து பஞ்சீகரணிக்கப்படுதலாற்றான்—வாய்மையான ஒழுக்கத்தாற்றான் வீடு பேற்றின்பம் அடையப்படவேண்டும். இடமும் பொருளுமாக விளங்கும் உடலுயிர்கள் அசுத்தம் நீங்கி ஒன்றுதலாற்றான் வீடு பேற்றின்பமாகிய சுத்த காம உணர்ச்சி உளதாகும். இவ் அரிய பெரிய தூய உணர்ச்சியே பெரியோரால் இன்பம் என்று சிறப்புறக் கிளந்து கூறப்பட்டது. "அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு அவலக் கவலைக் கையாற்றினீங்கி யணியினது ஒளியும் மலரினது நாற்றமும் சந்தனத்துத் தட்பமும் போல உண்ணின்றெழுதருமொரு பேரின்ப வெள்ளத்தது" என்பது இறையனார் அகப்பொருளுரை. முன்னிலைகள் நிறைகண்டு பஞ்சீகரணிக்கப்படுதலால் அறமும் பொருளும் ஒன்றாகி இன்பம் உளதாகும். இம் மூன்றும் கெட்டுத் திரிந்ததே வீடாகும் என்க. சரீரமாகிய அசுத்த நிறை அமைந்த இல் வாய்மையான அற நெறியால் அசுத்தம் நீங்கி அருள்வடிவமான இல் ஆகப் பெறுதலே வீடு கட்டுதல்-வீடு ஆக்குதல் என்பது. இவ்வுண்மை அறியாதார் தமது சரீரத்தை காரணமின்றி வருத்திக் கூடாக்கி—அசைவற்ற பிணமாக்கி அறமுதல் நாற்பயனும் இழந்து மாண்டுபோவர். பின்வரும் திருவாக்கும் இவ்வுண்மையை நன்கு புலப்படுத்தும்:

### திருவாய் மொழி

ஊன்வாடவுண்ணாதுயிர்காவலிட்
டுடலிற்பிரியாப்புலனைந்துநொந்து
தாம்வாடவாடத்தவஞ்செய்யவேண்டா
தமதாவிமையோருலகாளகிற்பீர்
கானாடமஞ்ஞைக் கணமாடமாடே
கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய்
தேனாடமாடக்கொடியாடுதில்லைத்
திருச்சித்திரகூடஞ்சென்றுசேர்மின்
[களே.
(திருமங்கை ஆழ்வார்).

வீடாக்கும் பெற்றி யறியாத மெய்வருத்
[திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல் வீர்—
[வீடாக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற் பொருள்
[தான் விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாரா யணன்.
(திருமழிசை ஆழ்வார்).

தம்முள்ளே குருதரிசனம் பெற்ற—அமலமுதற்படி கண்ட மெய்யடியா ரால் அடையப்படுவ தன்றோ ஈச னெந்தை இணையடி நீழல்இன்பமாகிய சுத்தகாம இன்பம்! பின்வரும் திரு வாக்கும் அவ்விடுபேற்றின்பத் திறனை நன்கு புலப்படுத்தும்:

## அப்பர்

மாசில்வீணையும் மாலைமதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசனெந்தை யிணையடி நீழலே.

கனியிலுங் கட்டிபட்ட கரும்பிலும்
பனிமலர்க்குழற்பாவை நல்லாரிலும்
தனிமுடிகவித்தாளுமரசிலும்
இனியன் றன்னடைந்தார்க்கிடைமருதனே
(ஷை திருவிடைமருதூர்—திருக்குறுந்
தொகை 10.)

## சுத்தசாதகம்

அனமதம்பாலுஞ்சருக்கரைகண்டு
மங்கனிவகைகளுந்தேனும்
இனமவையொன்றாய்க்கூட்டியருசி
யினிதயதின்றிடவிடாதூறும்
கனபிரணவமுதத்தையேயருந்திக்
களிப்பவர்மீட்டுமச்சகத்தின்
பினமுறவிடயவின்பை யெண்ணிடுமோ
பிராரத்தமும்மிலையவர்க்கே. (92)

அசுத்த காம உணர்ச்சி யுடையார் வேதாகம புராணேதிகாசங்களையும் தத்துவப் பெரியார் பாடல்களையும் உன்னதமான சங்கநூல்களையும் ஆராய்ந்து அவற்றுட்பொதிந்து கிடக் கும் அரிய உண்மைகளை யெல்லாம் அறிவதென்றால், அவ் ஆராய்ச்சிக் காரர் இருக்கும் தத்துவத்துக்கு ஏற்ப அறியலாமேயன்றி அவர் தமது தத்து வத்துக்கு மேற்பட்ட உண்மைகளை அறிதல் முடியாத காரியமே! இதனாற் றான் தற்காலப் புலவர்களும் பிறரும் ஆஸ்திகரும் நாஸ்திகரும் காதல் என் பதை இன்னது என உணராது ஒரு வனும் ஒருத்தியும் மனம் ஒத்தக் கூடு வதே காதல் மணம் எனவும், வேதங் களும்,கோவை, அகப்பொருள் என் பனவும் நூதலிய பொருளும் அதுவே எனவும் ஓலமிடுகின்றனர். ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழ்க்கை நடாத்தி முன்னிலைகளைக் கண்டுகளித்து ஐம்புல இன்பங்களையும்விரும்பியவாறு அநுப வித்து வாழ்வதே இல்லறம் எனப் படுவதும்,இவ்வாறன்றி முன்னிலைகளை வெறுத்து வேடம்பூண்டு போலிச் சத்துவம் வகித்து ஒருபால் ஒதுங்கி யாசகத்தாலும் பிறவாறும் செடியூனு டல் ஒம்புவதே துறவறம்எனப்புகழப் படுதலும் உலகியலாகின்றன. வேதங் களின் பொருளும் அகப்பொருளுண் மையும் ஒன்றே என்பது அமயம் நேர்ந்துழி விளக்கிக் கூறப்படும்.

பக்குவியானவன் குருவருளால் தன் சரீர பௌதிக நிறையறிந்து முன்னிலையான ஐம்புல நுகர்ச்சிகளை அளவோடு பஞ்சீகரணித்துப் பாசம் நீங்கி—உடலுயிர்கள் அமல மடையப் பெற்று உய்தியடைவன். அபக்குவிக ளாகிய உலக மாக்கள் அசுத்த ஐம்புல நுகர்ச்சியையே வாய்மை என நம்பி, நிறையும் இனமும் அறிந்து அவற்றை அநுபவித்து உய்யும் திறன் அறியாது அம்முன்னிலைகளை இஷ்டம் போல அநுபவித்து அதனால் பிணி மூப்ப டைந்துமாண்டுபோவர்.முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து உய்தி யடைய அறியாது உடம்பை வாட்டி வருத்தித் தவம் புரிவோரும் போலித் துறவிகளும் இயற்கைக்கு முரணான தமது செயல்களால் பௌதிகங்கள் பேதமடைந்து சாதலடைவர். இன் னோர்க்கும் விடுபேற்றின்பத்துக்கும் உள்ள இடையீடு அளவிடற்கரிய தாகும்.

சிவம் எனும் ஆணும் சிவை எனும் பெண்ணும் கற்பனை அத்தியாயத்தில் காரண காரியம் எனப்படும். . இவ் இரண்டும் நிறையோடு பஞ்சீகரணித் தாலன்றி அமல ஐகாரம் என்னும் ஞான சத்தி தனது பாதச் சிலம்பை அசைத்து ஒலிக்கச் செய்யாள் என்பது வேத உண்மை—திருவரு ளாணை. இதுதான் ஞானத்துக்கு அடிப்படை. மத நூலே ஆதி. (மன்+மத+நூல்) இதில் நின்று பிரிந்தவை வேதாந்தம் சித்தாந்தம் அத்வைதம் த்வைதம் விசிஷ்டாத் வைதம் என அறியக்கிடக்கின்றன. இவை அமயம் நேர்ந்துழி விளக்கிக் கூறப்படும். உலகமாக்களுக்கு இது சிற்றின்ப வாக்கியம். திரோபவத்தை நீக்குவான் முயலும் ஆற்றலுடையார் க்கு இது பேரின்பப் பொருள். இதுவே பெரிய வித்தை—ப்ரம்ம வித்தை. இதுதான் தாயைக்காண்பிக் கும் பாதை. இதனை அறியும் புண்ணி யம் பெற்று எம்பெருமான் திருவுளம் இரங்கி இதற்குரிய தீயை (தீ) வலக் கரத்தில் (கை) ஈந்தாலன்றி, தைய லார் மையலெனும் தாழ்—சரீரத் தைப்பற்றிய அசுத்த காமப் பிணி உருவப்படாது பாசமெனும் கீழ் நிறையே பொலிவுபெற்றுச் சாதலைத் தரும். தீக்கையைப் பெற்றவர்க்கு இவ்வாறன்றி, பாசமெனும் தாழ் உரு வப்படும். மையல் எனும் கடலில் பை யப்பையக் கொடுபோந்து பாசம் எனும் தாழ் உருவி உய்யும் நெறி காட்டப்படும். இவ் அரிய பெரிய உண்மையையே மறை பொருளாக வைத்து—கௌணமாக அமைத்து.

## திருவாசகம்

தையலார் மையலிலே தாழ்ந்து விழக்
[கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந்
[தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத்
[துட்பொருளை
ஐயனெனக் கருளிய வாறார்பெறுவா
[ரச்சோவே.
(ஷை அச்சோபதிகம் 7.)

என அருளியது நமது மாணிக்கம். இவ் அரிய பெரிய வேத உண்மைகளை யெல்லாம் அசுத்த காமப் பித்தேறிய

மருளுடம்பினராகிய உலகமாக்கள் தங்கள் கல்வி வன்மையால் அறிவது என்றால் முடியுமா? மணிவாசகனுகிய மாணிக்கமணி பைத்தியக்காரனல்லவே! தற்காலத்தவர் சிலர் பலர் கருதுவதுபோல அசுத்த முன்னிலைகளைக் கண்டு களித்துக் கோவைபாடியதா மாணிக்க மணியாகிய அமலமணி? காயமாயம் கழிந்து தன்னிலையே முன்னிலையாய் முன்னிலையே தன்னிலையாய் தானே தானாய் முன்னிலையை விவகரிக்கும் பக்குவம் ஏற்பட்ட பின்னன்றோ கோவையை அருளியது மாணிக்கம்! மூலம் விமல மடைந்தாலன்றி— தூய்மையடைந்தாலன்றிவேறு வகையால் படியேற்றம் பெறுவது முயற்கொம்பே என்பதில் ஐயமுண்டோ? இது அரிய பெரிய தத்துவார்த்தம். வேதத்தின் மூலப்பொருள் இதுவே யாவும் இதில் அடங்கின.

சம்ஸ்கிருத பாஷையில் மிளர்கின்ற வேதங்கள் தங்களுடையனவே எனக் கூறுபவருந்தான், வேதாந்தி சித்தாந்தி சிவாத்துவிதி அத்வைதி எனத் தங்களைக் கூறிக் கொள்பவருந்தான் இவற்றின் உண்மைகளை அறிவது என்றால் அது முயற்கொம்பே. இவற்றை அருளிய பெரியார் அடைந்த தத்துவங்களை அடைந்தன்றோ இவற்றின் உண்மைப் பொருளை அறிதல் வேண்டும். இவையும் பிறவும் அமயம் நேர்ந்துழி விளக்கிக் கூறப்படும். இறையனுர் அகப்பொருள் என்னும் தெய்வத் திருமறையின் உண்மைப் பொருள் யாது? அந்நூல் நுதலிய பொருள் என்னை? இவ்வுண்மைகளைக் குருவாயிலாக அறிந்து ஒழுகிச் சிதையை அடைந்து ராமனுய்—விமல மூர்த்தியாய் நின்று கோவைபாடிய கோமான் மணிவாசகன் அல்லவா? அவனே மன்மதன். மதனனபின் அவனுக்கு மன்மதன் வேறோ? மித்திரனல்லவோ? அடிமை யல்லவோ? தன்னிலையானது முன்னிலையில் எத்துணைப்பாகம் (நிறை) நட்புப் பெறுகின்றதோ அத்துணையும் படியேற்றமன்றோ! சிவமும் சிவையும் நிறையோடு பஞ்சீகரணிக்காவிடின் — உடலும் உயிரும் ஒழிவற ஒன்றுவிடின் என்ன பயனை அடைய முடியும்?

உடலு முயிரு மொழிவற வொன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமா
முடலைவிட் டிந்த வுயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் கரக்குஞ் சிவத்தே.

(விசுவக்கிராசம் 2.)

என்பது திருமந்திரம். அறமுதல் நாற்பொருளை அடைவது எப்படி? அகில மாக்கள் இவற்றை ஒரு சிறிது அறிந்தாலும் அநர்த்தஞ் செய்து காமுகராவர் — சடிதியில் மாண்டுபோவர். திருச்சிற்றம்பலக் கோவையை ஒவ்வொருவரும் தம் தம் அறிவிற்கேற்ப வன்றோ உரைருகின்றனர்! "காமுகர் காம நன்னூல தென்பர்"

சிவமும் சிவையும் நிறையோடு பஞ்சீகரணிக்கப் படுதலானன்றி வேறு எவ்வாற்றானும் இல்லறம்-இல் அறுத் துறவறம் அறியப்படுவது—அடையப்படுவது முயற்கொம்பேயாகும். இல் அறுது இருப்பதே — காயமாயம் கழிந்து விமல யாக்கை பெறுவதே— இதற்கேற்ற பொய்யில் ஒழுக்கமே இல்லறம். அவ் இல்லைத் திறவுகோலால் — அறவு கோலால் திறப்பதே-துறப்பதே துறவறம். (திறப்பு துறப்பு என்பன ஒற்றுமை வழக்கு) கபாடித்திருக்கும் சிவம்— மறையாயிருக்கும் சிவம்—மறைக்காடு, சிவையாலன்றி வேறு எவ்வாற்றானும் திறக்கப்படுவதன்று. சற்குரு நாதன் தீக்கையால்—கைத்தாழால் திறக்கப்படல் வேண்டும். ஈன்ற வாசலுக்கிரங்கி எண்ணிறந்து போகும் உலக மாக்கள் நான்ற வாசலைத் திறந்து சிவதரிசனஞ் செய்தல் முடியாது! பின் வரும் திருவாக்குக்கள் இவ் அரிய பெரிய உண்மையை நன்கு புலப்படுத்தும்:

### திருமந்திரம்

மெய்த்தா ளகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாள்கொண் டாருந் திறந்தறி வாரில்லைப்
பொய்த்தா ளிடும்பையைப் பொய்யற நீவிட்டங்
கத்தா டிறக்கி லரும்பெற தாமே.

வம்பு பழுத்த மலர்ப்பழ மொன்றுண்டு
தம்பாற்பறவைபுகுந்துணத் தானொட்டா
தம்புகொண் டெய்திட்டகலத் துரத்திடிற்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாமே.

(ஷை 8-ம் தந். 28-வது வாய்மை 11, 13)

[துரத்தலே துறத்தல். மாயை— அஞ்ஞானம் அசுத்தம் நீங்குவதென்பது. ரகர மெல்லினம் வல்லினமாக வழங்குதலும் இயல்பே.]

'..................................
நான்ற வாசலைத்திறந்து நாடிநோக்க வல்லிரேல்
தோன்றுமாயை விட்டொழிந்து சோதி வந்து தோன்றுமே."

(சிவவாக்கியர் பாடல் 68.)

இவ் வுண்மை இன்னது என அறியாது, வழியறியாது, வாமம் இன்னது என அறியாது, வாம பாகம் வகிக்க அறியாது, அர்த்த நார வடிவ மறியாது, அதனை அடையமுடியாது, மல பரிபாகம் பெற அறியாது, இருவினை சமப்படும் நெறியறியாது, மல பரிபாகம் இன்னது என அறியாது உலக மாக்கள் மதி மயங்கி வேதாகம உண்மைகள் என்று தங்கள் மனதிற்றோன்றிய சில பலவற்றை எழுதி வைத்துவிட்டுச் சாதலடைந்தார்கள். உலகத்திலே வேதாந்தம் சித்தாந்தம் சமரசம் முதலிய பெயர் பூண்டு தற்காலம் வழங்கும் கொள்கைகள் உண்மையைப் புலப்படுத்தாது பலரையும் சோம்பேறிகளாகவும் ஆக்கிவிட்டன என்பது மிகையன்று. ஏட்டுச் சுரைக்காயைச் சமைத்து அருந்தி அகம் பிரமமடைந்து சாதலடைகின்றனர். இதற்குக் காரணம் கல்வியில்லாமையே! இலக்கண் இலக்கியம் சிறிது கற்றதும் வேதங்களையே உணர்ந்துவிட்டதாகத் துணிந்து பலவித நாடகங்கள் புரிவதும், பொருள்-பணம்— பணம் என்னும் தனம் இன்னது என அறியாது இடத்தையும் பொரு

ஊயும்' வேறு பிரித்துப் பேசிப் பொருளை அநர்த்தஞ் செய்து செடி யாராக்கையை ஓம்புதலும் அறிவுடை யாக் கழகாமோ? இவ்வுண்மைகளை யெல்லாம் உணர்ந்தவன் மாணிக்கம் அன்றோ! அதனாலன்றோ கோவை அருளினன்! சிவம் சிவை (ஆண் பெண்) என்றும் உள்ளன. இவை இயற்கை. அருந்தல் பொருந்தல் அனந்தல் என்பனவும் இயற்கை. இவை அமையப்பெறாது சரீரத்தை வாட்டி வருத்துவோர் உண்மை காண மாட்டார் — எம்பெருமான் திருவடியைக் காணமாட்டார். இது பற்றியே,

"துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்"
(திருவாசகம்—திருவண்டப் பகுதி).

என்று அருளியது மாணிக்கம்.

நிறையும் இனமும் அறிந்து அருந்தலால் அருந்தியது பொருந்துதலால் தீய இச்சைகள் நீங்கவேண்டும்— அசுத்த நிறை ஆதிக்கம் பெறாது அழியவேண்டும் என்பதனையே பின் வரும் இருக்கு வேதச் செய்யுளும் நன்கு புலப்படுத்துகின்றது:

## இருக்கு

அஷ்டகம் 2—அத்தியாயம் 6—மண்டலம் 2—சூக்தம் 23.

"காமமதைப் பூரிக்குந்தாய் துணையி
னுத்தமமாக் கழறு மன்னம்
எம்முற வெய்துகம் யாம்; தீயர் விரு
கப்பதியே யெமையடக்கிச்
சேமமுறு மிச்சையுளோ ரெமக்கிறைவ
ராகாராய்ச் சேர்க; யாமும்
தோமமுனதருஞ் சீரைத்தோற்றுபவை
தமிற்றுதித்துத் தோய்க வாழ்வே."

(இ-ள்) — பிரஹஸ்பதியே! இச்சைகளை நிறைவேற்றும் உனது பரிசுத்தமான உதவிகளால் உத்தமமான அன்னத்தை (ஜீவசக்தியை) அடைவோமாக. எம்மை யடக்கிச் சுகத்தை அடைய வெண்ணும் துஷ்ட புத்திகள் எமக்கு நாயகர்களாக வரா தொழியட்டும். யாங்களும் உமது பெருமையைத் தோற்றும் ஸ்தோத்திரங்களால் உன்னைப் புகழ்ந்து வாழ்வை யடைவோமாக. (எ-று.)

[வய:—அன்னம், ஜீவாதாரம், ஜீவசக்தி என்னும் பொருளன.]

ஏனைய பிரமாணங்கள் அமயம் நேர்ந்துழிக் காட்டி விளக்கப்படும். வேதங்களும், திருவாசகம், திருமந்திரம், தேவாரம், திருவாய்மொழி, ஔவை குறள் முதலியனவும், சுத்த சாதகமும் அருந்தல் பொருந்தல் அனந்தல் களால் அசுத்த நிறை நீங்கி உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் அடைதலாகிய உண்மைச் சைவக் கொள்கையையே வலியுறுத்துகின்றன.

சிவமும் சிவையும் (ஆண் பெண்) நிறை கொண்டு பஞ்சீகரணிக்கப்பட்டால் பிணி ஏது? மூப்பேது? சாக்காடேது? அகிலமே ஆண் பெண்ணாக இலங்குகின்றது. ஆணும் பெண்ணும் கூடிக் குழைந்து அநுபவிக்கும் இன்பமே சிற்றின்பம் எனப்படும். இச் சிற்றின்பமே பேரின்பத்தைக் காட்டும் வாயிலன்றி வேறு தடம் இல்லை. பின் வரும் பிரமாணம் இவ் உண்மையை நன்கு புலப்படுத்தும்:

## திருவாய்மொழி

வாடினேன்வாடி வருந்தினேன் மனத்
[தால்பெருந்துயரிடும்பையில் பிறந்து
கூடினேன்கூடியிளையவர்தம் மோ—
[வர்தரும்கலவியேகருதி
ஓடினேனோடியுய்வதோர்பொருளா
லுணர்வேனும் பேரும்பதந்தேரிந்து
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்
[நாராயணாவென்னும் நாமம்.
(திருமங்கை ஆழவார்)

இது அரிய பெரிய வித்தை-பெரு நிறையுடைய பயில்வு. சீவராசிகள் அனைத்தும் இச் சிற்றின்பமென்னும் இணைவிழைச்சில் கட்டுப்பட்டு நிறை கடந்ததனால் மாழ்கி மாண்டுபோகின்றன. இச் சிற்றின்ப தடத்தின் பெட்புக்களனைத்தும் விளக்கிக் காட்டுவது மதனாகமம். இவ் ஆகமம் (மதனாகமம்) இல்லறத்தார்க்கு முக்கியமெனக் கருதியே நந்திகேசுவரர் முதல்நூல் அருளினர். பின்னர்சப்தரிஷிகள், பாஞ்சாலர், சுவேதகேது, வாற்சாயனர், கொக்கோகர் முதலிய பெரியோர்கள் சுருக்கிச் செய்தார்கள். கொக்கோகர் அருளிய நூலைத் தமிழ் வல்லோர் அறிந்து உய்யும் பொருட்டு வரதுங்கராம பாண்டியர் தமிழ்ப்பாவாக மொழிபெயர்த்தார். இந்நூலில் வாய்மையான இல்லறம் — இல்வாழ்க்கையின் பெற்றி நன்கு விளக்கிக் காட்டப் பட்டது - அவை பின் வருமாறு:

## கொக்கோகம்

பத்திசெய்சமயபேதப்பகுதிக்குப்பொது
[வாய் நிற்கும்
புத்தேனுநரகைநீக்கிப்பொருவரு
[வீட்டை நல்கும்
உத்தம வனத்தஞானவுருவெபேத்தியலா
[நிற்கும்
சத்தியமிகத்திற்பேறுதருவதில்
[வாழ்க்கை யென்பார்.
(இல்வாழ்க்கை)

இத்திர நூலிற்சொன்ன வியலினை முழுது
[மோர்ந்து
முத்தேனு நகையார்போக முயக்கினைப்
[பெற்றோர்தாமே
சேத்தபின் முத்திசேர்வதேன்னு மச்சி
[லுகைத் தீர்த்தே
கொத்தலர் குழலார் அன்பிற் கொடுக்கப்
[பேரின்பம் பெற்றார்.
(ஷ அத்தியாயம் 6. செ. 79)

இவ்வுண்மையையே பின்வரும் பிரமாணம் நன்கு வலியுறுத்துகின்றது:

## ஞானசம்பந்தர்

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலி தழலுமையோடேவிரவது
[செய்து
நரைதிரைகெடுதக வதுவருளின
[னெழில்
வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே.
(ஷ திருவலிவலம் 6.)

இதுதான் முத்திக்கு வாசற்படி. இதனை அடைவது எளிதன்று. குரு உரை வழுவாது கற்பனை ரூபமாகி

விளங்கும் போலித் தந்தை தாய் பெண்டிர் மக்கள் சுற்றம் என்னும் முன்னிலைகளை நிறையோடு உறவுபடுத் தலாற்றுன், முன்னிலைப் பொருள்களை நிறையும் இனமும் அறிந்து பஞ்சீகர ணித்தலாற்றுன் அமல நெறி காணப் படும். அமல முதற்படி கண்ட பின் னேயே வாய்மையான தந்தை தாய் பெண்டிர் மக்கள் சுற்றம் காணப் படும் — வாய்மையான இல்லறம் — இல் அருத் துறவறம்—வாய்மையான துறவு ஏற்படும். முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகரணிக்க அறியாது— ஐம்புலத்தாறு ஓம்ப அறியாது வேடம் பூண்டு ஒருபால் ஒதுங்கி பிறர் மயங்க நடிப்பவர்களையும், வாயோடு கண்மூடி மயக்கமுற்று வீற்றிருக்கும் அசட்டு யோகிகளையும் துறவிகள் என்பது அறியாமையே! தற்காலத் தில் தமிழ் நாட்டைப் பஞ்சப்படுத்து வோர் போலித்துறவிகளே என்பது மிகையன்று. அமல முதற்படியை அடைந்து மாயையை வசப்படுத்திய— அடிப்படுத்திய மெய்யடியாரே—வழி யடியாரே சகல போகங்களையும் நிறை கண்டு அநுபவித்து உண்மைத் துறவு பூண்பவராவர். பிரபஞ்ச முழுவதும் இவருடைமையே! எம்பெருமானுக் கும் பிள்ளையான இடம் இதுவே. பக்குவம் வந்த பிள்ளை யாதலால் தன் பிள்ளை கையில் சாவி யைக்கொடுப்பான் அப்பன். “நீயே இவ்வுலகத்தும் மற்றெவ்வுலகத்தும் கோலோச்சுவாய்” என்பான். யாவும் குறைவின்றி இருக்கப் பெற்றவர் அவற்றைத் துறப்பதன்றோ துறவு! இவ்வுலகத்தை ஆளும் சக்கரவர்த்தி யாயினும் இந்திரபோகம் தனக்கு இல்லையே என்னும் குறை அவனுக் குண்டு. அமலமுதற்படி கண்ட மெய் யடியார் தன்மை அவ்வாறன்று. அவர் நினைத்த வெல்லாம் முன் வந்து நிற் கும். அவரே இந்திரர் — குபேரர். அவர் ஆற்றலும் அருமை பெருமை யும் நம்மனோரால் அளவிடற்பாலன வாகா. இத்தன்மை வாய்ந்து யாவற் றையும் நிறையோடு கண்டு உண்டு உபரதி பெற்ற வாய்மைத் துறவிகள் இலங்கோடு கோவணத்தோடும் வேட ங்களோடும் ஊர் தோறும் திரிந்து சிலகாலம் வாழ்ந்து மாண்டுபோகும் போலித் துறவிகளாவாரா? ஆகார்! ஆகார்! இத்தகைய அரிய பெரிய சைவ சமய உண்மையை அறியாமை யாற்றுன் தற்காலத்தவர் பலர் சைவ சமயத்தைப் புறச்சமயங்கள் போல மதித்து எளனஞ் செய்யத் துணிந்து கொண்டனர். அமல நெறி கண்ட மெய்யடியாரே—வாய்மையான இல்லற முடையோரே—இல் அருத் துறவற முடையோரே உலக குரவ ராக வெளிப்பட்டு நிக்கிரக அநுக்கிர கங்களால் உலகிற்கு அருள் புரிபவரு மாவர். துறந்தார்க்கும் துவ்வாதவர்க் கும் இறந்தார்க்கும் நால்வகை உபா யங்களால் துணைபுரிவோரும் இவரே யாவர்.

குறள்

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந் [தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

(ஷை 5-ம் அதி—இல்வாழ்க்கை 2.)

என்பது தேவர் வாக்கு. உலக சீவர் கள் (மக்கள்) பொதுவாக மூன்று வகையுள் அடங்குவர். இவற்றுள்ளும் உட்பிரிவுகள் உண்டு.

1-வது. துறந்தார்:— உண்மையை உணர்ந்து விட்டதாக நினைந்து பிறரை வேடத்தால் வஞ்சித்தல்; அதற்கேற்ப நடித்தல். இவரே வேடத்தவர்; வேட த்தால் துறவடைந்தவர்; போலித் துறவிகள். [உண்மைத்துறவிகளாகிய அந்தணர் பிறர் துணையை வேண்டுபவ ரல்லர். சீவகாருண் மூர்த்திகளாய்ப் பிறர்க்குத் துணைபுரிபவர் அவரே ஆதலின்]

2-வது துவ்வாதார்:—வைராக்கியத் தால் முத்திக்கேற்ற முயற்சியில் ஈடு படும் ஆற்றலிருந்தும் வினையின் பய னை தமோகுணமேலீட்டினல் துணை புரிவோரின்றி — தூண்டுவோரின்றி நல்குரவால் பீடிக்கப்பட்டு ஏங்கித் தவிப்பவர்.

3-வது இறந்தார்:—நெறி கடந்தவர்; நிறை கடந்தவர்; படிற்றொழுக்க முடையோர்; இவரையே இறந்தா ரென்றார் தேவர்.

இம் மூவகையினரையும் நால்வகை உபாயங்களாலும் நன்னெறியில் உய்ப்பவர்—இவர்க்குத் துணையாவார் இல்வாழ்வார் — வாய்மையான இல் லற முடையோர் என்க. எவ்வுயிர்க் கும் செந்தண்மை பூண்டொழுகும் ஆற்றலுடைய இல்லறத்தினரே —அந் தணரே—வாய்மையான துறவிகளே இம் மூவர்க்கும் துணைபுரியும் ஆற்றலு டையார் என்க. எத்தனையோ இருடி களும் முனிவர்களும் மெய்யடியாரும் வாய்மையான இல்லறத்தில் — இல் அருத் துறவறத்தில் நின்றவரே என் பதில் எட்டுணையும் ஐயமில்லை. அறத் தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றி உண்மைத் துறவிகளாய்த் தமது உட லும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தி யத்துவம் அடைந்தவர்—உண்மைச் சைவ முத்தியடைந்தவர் இவரே யாவர். இத்தகைய வாய்மை நெறியொ ழிந்த புறத்தாறுகளெல்லாம் போலி நெறிகளே—பிறவி நெறிகளே யாகும். வாய்மையான இல்லறத்தினரே வைய த்துள் வாழ்வாங்கு வாழ்பவர்—வானு றையும் தெய்வத்துள் வைக்கப்படு பவர்—மன்னுயிரால் வழிபடற்பாலர்.

குறள்

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் [புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானு [றையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(ஷை 5-ம் அதி. இல்வாழ்க்கை 6.10.)

திருக்குறள் என்னும் அரிய பெரிய நூலை ஆராயுமிடத்து, அதன் ஆசிரி யர் வாய்மை நெறியை—உண்மைச் சைவ நெறியைக் கடைப்பிடித்து ஒழு கியவர் என்பது நன்கு புலப்படும். இவர் சரித்திரமும் ஏனைய மெய்யடி யார் சரித்திரம் போலவே வாய்மை யாக எழுதப்பட்டு வழங்க வில்லை.

# ஆரியமும் தமிழும்

(12-ம் வாரத்தொடர்ச்சி)

"அந்தணர் மறை" என்றும், அரிய பெரிய "மகாரம்" என்றும், 'மௌன வித்தை' என்றும், 'அமல ஐகார ஒலி' என்றும், 'எழுதாமறை' என்றும், 'வடகத் தெழுதாத வேதம்' என்றும், 'வடசொல்' என்றும், 'எழுதாக்கிளவி' என்றும், 'நித்திய வேதம்' என்றும், 'எம்பெருமான் வடிவம்' என்றும், பெரியாரால் புகழப்பட்ட வியாப்பியமாகிய 'ஆரியம்' என்பது உள்ளியக்கமாகத் தனக்குள்ளே தானே ஒலிப்பதும், புற இயக்கமாகிய ஒலிவரி வடிவம் இல்லாததுமாகும். வியாப்பியம் அசைவற்ற இடம் எனப்படும். அஃதாவது அசையாமல் அசைந்து நிற்கும் இடம் என்பது. இதுதான் அமல நிறை எனப்படுவது. வியாப்பியத்தின் அந்தமும் வியாபகத்தின் ஆதியும் சேர்ந்த இடமே அஃதாவது அவை இரண்டும் காணப்பட்ட இடமே இருவினை உருவமாகிய உடல் உயிர் கெட்டுத்திரிந்து சமம் பெற்று நின்ற இடமாகிய வேதாந்த சித்தாந்த சமரச பூமி எனப்படும் ஆரிய பூமியாகும். "ஊசலாட்டு மிவ்வுட லுயிராயின இருவினை யறுத்து..........உணர்வு தந்து ஒளியாக்கி... ....." (திருவாசகம் அற்புதப் பத்து. 8) எனவும், 'ஊனுயிர் வேறு செய்தான்' (சுந்தரர் தேவாரம் எனவும் வருவனவற்றை நோக்குக. இவ்விடத்தை அடைந்த வேதாந்த சித்தாந்த சமரச நிலை பெற்ற வித்தகச் சித்தராகிய தத்துவப் பெரியார்க்கு மாயையும் அருளும் சம நிலையாகும்.

### சுத்த சாதகம்

"................................
சீவன் முத்தனுக்கேரியின்கரைமீதிற்
றிகழ்ந்திடுவோனைப்போற்றேனென்றும்
ஆவது நாகங் கண்சரி நுதிக்கை
யறிதல்போற்நாகங்கண்மணிபோல்."

நிறைகோலாகிய மையமுள் எப்பக்கமும் சாயாத புற இயக்க மென்னும் வெளிப்படையான இயக்கமின்றி அசையாமல் அசைந்து நிற்கும் இடமும் இதுவேயாகும். அசைவு, இயக்கம், நடனம், ஒலி என்பன ஒன்றே. அம்மையமுள் நிறை காட்டும் நிறையைக்காட்டுவதும் நிறையும் அதுவே. சிவமே நிறை. நிறையே அமல ஐகாரம். இதுவே எம்பெருமான் வடிவம் எனப்படும் எழுதா மறையாகிய நித்திய வேதம். இவ்வமல ஐகாரத்தினின்று நிறைபிரிந்து பஞ்சிகரணித்து வியாபகம் பெற்றது அகிலம். தனக்குள்ளே தானே சுழன்று அசையாமல் அசைந்து நிற்கும் வியாப்பியமாகிய இவ்வாரியம் என்னும் அரிய பெரிய மகாரமானது "ம" எனப்பூத்தது. அஃதாவது நிறை பிரிந்து பஞ்சீகரணித்துப் பல வித நாதங்களையும் ஒலிகளையும் புறவியக்கம் அடைந்தது—வியாபகம் பெற்றது—விரிந்தது என்க. "மா எனப்பூத்தது" என்பர் பெரியார், "ம" எனப் பூத்து அகரம் தோன்றி அகிலம் தோன்றியது.

### குறள்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

என்பது தேவர் வாக்கு. வியாப்பியமாகிய மகாரமே ஆதியும் அந்தமுமாகும். எதற்கு ஆதி? வியாபகத்துக்கு ஆதி. எதற்கு அந்தம்? வியாப்பியத்துக்கு அந்தம். ஒலி என்பது ஆதியில் மகா மந்திரமாகிய மகார ஒற்றேயாகும். இயக்கத்துக்கு ஆதி இதுவே இதுவே மௌன எழுத்து, மோன வித்தை, குண்டலி இயக்கம், உள்ளியக்கம் முதலிய பல நாமங்களால் மெய்யடியாராகிய சித்தர் பெருமக்களால் கூறப்படுவது. உள்ளீடாக ஒலிக்கும் இதனையே "அந்தணர் மறை" என்றனர் பெரியார். என்னை? நாத அந்தத்தை அணவிய தத்துவப் பெரியாராகிய அந்தணரே இதனை அநுபவமாக அறிய வல்லாராதலின். இரு செவி ஒன்றாய் இசைத்து உள்ளீடாக "ம்" எனச் சுழன்று ஓவாது ஒலிக்கும் இவ்வரிய பெரிய மகாரம் நிறைபிரிந்து "ம" என மலர்வதால் அகாரம் தோன்றுகிறது. மற்றைய ஒலிகளும் இவ்வாறே தொடர்பாகத்தோன்றுவனவாகும். மகாரமே பிரணவம், ஓம் என்னும் பிரணவம் மகரமெய் இன்றித் தனித்து நிற்கமாட்டாது.

ஊன்று மிட மில்லாமற் பொருள் இருக்குமா? பிரணவமாகிய ஓங்காரம் "ஓ" என ஒலித்து "ம்" என ஊன்றும். இடமும் பொருளும் ஒன்றே. விவகரிப்பதனால் இரண்டாகக் கொள்ளப்படுகின்றன. மகாரமே இடம். அவ்விடத்து அடங்கினது பொருள். மகரமெய் உள்ளகம் உளது. அகத்துள்ளே அனைத்தும் ஒடுக்கமாகும். இதனை அறிவது மிக அரிது. அவ்விடத்து மருவினாலன்றி அறிதல் ஒண்ணாது. இம்மகாரம் இல்லாவிடின் ஒன்றும் இல்லையாகும். இதுவே ஒலி பீடம். அவ்விடத்து அகரம் உலாவுகின்றது. அகரந்தோன்று முன் இடம் தோன்றாது. மகாரமும் அகாரமும் ஒன்றனை விட்டு ஒன்று பிரியாமல் பிரிந்து காட்டிஒன்றேயாய் நிற்பனவாகும். இதனால் மெய்யில்லாமல் உயிரில்லை; உயிரில்லாமல் மெய்யில்லை. சத்தில்லாமல் சித்தில்லை; சித்தில்லாமல் சத்தில்லை என்னும் உண்மை பெறப்படுதலும் காண்க. உயிர் மெய்களுக்கு முற் பிற்பாடு கூறுதல் முடியாது. இவற்றின் அந்நியோன்னிய சம்பந்தம் அநாதியாகவுள்ளது. மகார ஒலியே இகர ஒலியுமுடையது. "ம்" என்ற போதே இகரம் தொனிக்கின்றது. மகரம் மெய் ஈற்றில் உகரம் தொக்கு விளங்கும். உகரம் இருதலைபுடையது. இகர ஒலி ஈற்றில் உகரம் மிக நுண்மையாகத் தோன்றும். இதனை மிக நுண்மையாக உணருதல் வேண்டும். ஓங்காரமாகிய மகார மெய் "ம்" என மலர்ந்து "அம்" என ஒடுங்கும். "அம்" என்ற இடத்து ஈற்றில் இகரம் விளங்குகின்றது, அ, இ, என்பன தந்தை தாயாரைக் குறிக்கும். உலகில் ஈன்றோர்க்கே "ஆயி" என்னும் பெயர் வழக்கும் உண்டு. அ, இ, உ, எ, ஒ, என்பன மகாரத்தினிடத்து உள்ளீடாகத் தொனிக்கின்றன. இதனால் பெறப்படுவது யாது?

(தொடரும்)

---

உலக மாக்களால் கொள்ளப்படுவது போலி இல்லறமும் போலித் துறவறமுமே யாகும். வாய்மையான இல்லறமே வாய்மையான துறவறமுமாம் என்பது மேலே விளக்கப்பட்டது.

இதுகாறும் கூறியவைகளால், கற்பனைகளாகிய முன்னிலைகளை இனமும் நிறையும் அறிந்துபஞ்சீகரணித்தலாற்றான் வாய்மையான இல்லறவாழ்க்கை உளதாகும் என்பதும், இல் அறுது இருப்பதே—அதற்கேற்ற ஒழுக்கமே இல்லறம் என்பதும், அவ் இல்லைத் துறப்பதே — திறப்பதே துறவறம் என்பதும், மெய்யடியாராகிய அந்தணரே உண்மைத்துறவிகள் என்பதும், வாய்மையான இல்லறத்தானன்றிப் பிறவாறு முத்தியடைதல் முடியாது என்பதும் பிறவும் ஒருவாறு உணரப்படும்.

சுபம்.

## “வித்தக” மங்கள சுலோகம்

### யாழ்ப்பாணச் சுன்னுகம்

பிராசீன பாடசாலைச் சம்ஸ்கிருத
பண்டிதசிகாமணியும்,
வேதவிசாரதரும் சேர மண்டல
பிராமணகுலோத்தமருமாகிய
ப்ரம்மஸ்ரீ
வி. சிதம்பர சாஸ்திரிகள்
வழங்கியது.

---

வித்த! த்வம் விதிநா ஸுஜாதக வஸாத்
ப்ராப்தஸ்ச வ்ருத்திம் பராம்
வித்யாவ்றுத்த விசக்ஷணஸ்ச மஹிதோ
முக்திம் ஸாயுக்தாம் வதந் |
பக்தியா வேதசிவாகமோபநிஷதாம்
கூடார்த்த விக்யாபநாத்
ஜீயாஸ் சைவ சிரம் விசேஷ விதுஷாம்
கோஷ்டீஷு ந்ருத்யமுதா ||

சுன்னுகம் பிராசீன பாடசாலை 8—2—34. } வி. சிதம்பர சாஸ்திரிகள்

ஷை சாஸ்திரிகள் விரும்பியவாறு
ஷை பாடசாலைத் தமிழ்ப்
பேராசிரியரும்,
இரகுவம்மிச உரையாசிரியருமாகிய
வித்வான் ப்ரம்மஸ்ரீ
சி. கணேசையர் அவர்கள்
இயற்றிய
ஷை சுலோகமொழிபெயர்ப்புச்செய்யுள்

### ஆசிரிய விருத்தம்

---

எத்தலுறும் வித்தகமே! யுனக்கமைந்த
சாதகத்தாலிலங்கி நாளும்
சாத்திரத்தி னொடுமுத்தி யென வேற்ப
வுரைத்தறிஞர் கணிக்க நின்ருய்!
ஓத்தினொடு மாகமத்தின் மறைபொருளை
வெளிப்படுத்தியுரைக்கு நீ தான்
சாத்திரந்தேர்புலவர் சபை தொறு நிருத்தம்
புரிந்தின்புதக வாழ்வாயே.

ஷை பாடசாலை 8—2—34. } சி. கணேசையர்

குறிப்பு:—எமது “ வித்தக வாயிலாக வெளிவந்த ஒவ்வொரு கட்டுரையையும் மிக்க ஆவலோடு படித்துணர்ந்து உண்மை கடைப்பிடித்துப் போலிக் கொள்கைகளாகிய அபிமானப் பேயால் ஆவேசிக்கப்படாது, தமது தூயஉள்ளத்தின் கண் எழுந்தஆராமை மிகுதியால் “வித்தகம்” வேத சிவாகமங்களின் மறை பொருளாயுள்ள (உடலுயிர் அமல மடைந்து சிவாங்கமாதல் என்னும்) உண்மைச் சைவ முத்தி நிலையை நன்கு நிலை நாட்டி அறிஞர் பேரவை தோறும் சென்று நடனம் புரிந்து மிகிழ்வூட்டி வாழ்க என அரிய பெரிய மங்கள சுலோகத்தால் அதனை வாழ்த்திய சற்குண உத்தமரும் சம்ஸ்கிருத வித்வசிகாமணியுமாகிய இப்பெரியாருக்கு எமது மனமார்ந்த வணக்கத்தைப் பணிவுடன் சமர்ப்பிப்பதேயன்றி வேறு கைம்மாறு யாதும் அறியகில்லேம் என்பதனை உரிமையோடு தெரிவித்துக் கொள்வதோடு, அன்னர் விரும்பியவாறு இம்மங்கள சுலோகத்தைச் சிறந்த செந்தமிழ்ப்பாவினுல் மொழிபெயர்த்து உதவிய வித்துவான் ப்ரம்மஸ்ரீ கணேசையர் அவர்களுக்கும் எமது வணக்கம் உரிமையாகற்பாலதே என்பதனையும் உவகையோடு தெரிவித்துக் கொள்ளுகின்றேம்.

[ப—ர்].

## மகாத்மா காந்தி

காந்தியடிகள் சென்ற சனிவாரம் (17-2-34) காலை சுமார் 8 மணிக்கு ஸ்ரீமான்கள் ராஜகோபாலாச்சாரியர், ராஜன், தக்கர், மிஸ்மீராபென், மிஸ் யூமாபஜாஜ், மிஸ் கிருஷ்ணபென், மிஸ் பீட்டர்சன் அவர்களுடன் புதுவைக்கு விஜயம் செய்தார். ஹரிஜனசேவா சங்கத்தார் வாசித்த உபசாரபத்திரத்தை செவிமடுத்த அடிகள் சில பலகூறி எல்லோருக்கும் வந்தனம் தந்தனர். அவ்வமயம் அவருக்கு அளிக்கப்பட்ட பொருள்கள் அனைத்தும் ஏலம் விடப்பட்டு, பணமாக்கப்பட்டன. பூகம்பத்தால்பீகாரில்ஏற்பட்டசேதங்களை நிவர்த்தி செய்வதற்காக தக்க நிதி ஒன்று சேகரம் செய்து ஸ்ரீமான் ராஜேந்திர பிரசாது அவர்களுக்கு அனுப்புமாறு கேட்டுக் கொண்டனர். கூட்டம் எவ்வித குழப்பமின்றி கலைந்தது. உடனே காந்தியடிகள் தன்னுடைய பரிவாரங்களோடு திருவெண்ணெய்நல்லூருக்கு புறப்பட்டு விட்டார்கள்.

---



நல்வினையுந் தீவினையு முண்டு திரிதருஞ் செய்வினைக்கும் வித்தா முடம்பு.

Sandhanam Printing Works, Pondicherry. Le Gérant R. Nagarattiram.